# சமயபுரம் ஸ்ரீ மாரியம்மன் பக்திமாலை



ஆசிரியர்
குற்றாலம் வள்ளிநாயகம்

காப்பு

சக்தி மகமாயி சமயபுரம் மாரி
சரணத்தில் பணிவோடு சாற்ற
பக்திக் கவிதைகளின் பாமாலை தொடுத்தின்று
பரவசத் தோடு வந்தேன்
சித்தி விநாயகா சிவபாலா விக்னேசா
சிராப்பள்ளி நகர்கொண்ட மலைவாசா
சித்தம் வசமாக்கு செயலெல்லாம் ஜெயமாக்கு
சேவிக்கக் காப்பாகு எனக்கு!

சமயபுரம் நடுவில் சகல உயிர்வணங்க
அமர்ந்த அழகு உமையே
இமயம் உனதுபுகழ் இதயம் எனதுசிமிழ்
எடுத்து நிறைக்கும் தமிழே
உபயம் உடலுனது உயிரும் கடனுனது
உலகில் ஏது எனதே
அபயம் பிறவிதினம் அடிமை கவிதைமனம்
அருள்க அருள்க வரமே! 1

உன்கோவில் என்வீடு உன்நாமம் என்நாவில்
உலகாளும் மகமாயி யே
உன்பாதம் நான்தஞ்சம் உன்பூஜையில் நெஞ்சம்
உயிரான சிவகாமி யே
கண்பார்வை நீயம்மா காட்சியும் நீயம்மா
கவியாவும் உனைப்போற்று மே
உன்பார்வை தொடும்நேரம் என்வாழ்வுத் தளிர்பூக்கும்
உடன்வந்து சீராட்ட வே! 2

கனக ரதமசைய கனலின் விழியசைய
கனியக் கனிய வாநீ
எனது மனமசைய இனிய தமிழிசையில்
எடுத்து எடுத்துத் தாநீ
அலையின் குழலசைய அரவுக் குடையசைய
அழகுக் கழகு தூவி
கலையின் நகிலசைய கவிதை இடையசைய
கருத்தில் நடக்கும் தேவி! 3

கண்ணணி கருணை காதணித் தாரகை
முன்னணி மூக்குத்தி வைரங்கள்
தண்ணளி இதழில் சாந்தியின் புன்னகை
சங்குக் கழுத்தினில் முத்துவடம்
விண்ணெனும் முலைமேல் காஞ்சனக் கவசம்
மின்னலின் இடையில் மேகலையே
திண்ணெனும் கால்களில் தண்டை, கரங்களில்
வண்ண வளையணி யாடுதுமே! 4

தொட்டிலில்நான் அழுதேனா தூக்கத்தில் சிரித்தேனா
தூயமனம் கலைந்தேனா காத்தேனா
வட்டிலில்பால் சோறிட்டு வாயூட்ட உண்டேனா
வாய்பேச மனம்மூட நின்றேனா
கட்டிலின்மேல் சுகித்தேனா கனிமழலை கேட்டேனா
காலமெலாம் சொந்தங்கள் தொடர்வேனா
பட்டியலாய் நீளுமிந்த பாவப்புணை கயிறறுக்க
பார்ப்பேனா மாரியுந்தன் மலர்ப்பாதம்! 5

நண்டுவளை துளைப்பதுபோல் நனவென்னைத் துளைக்குதடி
நாயகியே அமைதிக்கொரு வழிகாட்டு
வண்டுபழம் குடைவதுபோல் வலியென்னைக் கொல்லுதடி
வந்தெனக்கு ஆறுதலாய் சாந்திகூட்டு
தொண்டனுளம் கதறுதடி தூக்கமின்றிக் கலங்குதடி
தூயவளே சேர்த்தணைத்து தாலாட்டு
விண்டுசொல வார்த்தையிலை வேறெனக்கு யாருமிலை
வேதனையின் வெளிப்பாடே என்பாட்டு! 6

மூச்சறியா உயிருண்டோ முகந்தெரியாப் பெயருண்டோ
முக்திக்கு நீயின்றி வழியுமுண்டோ
கூச்செரிய மயிர்க்கால்கள் கோர்த்திருக்க விழியில்நீர்
கூப்பிய கரத்தோடு நிற்கின்றேன்
பாச்சொரியும் பக்தன்முகம் பாராத தேனம்மா
பகவதியுன் தரிசனம் காணில்
பூச்சொரியும் வானம் புகழ்சொரியும் பூமி
பூரிக்கு மென்னாவி பூத்து! 7

கருப்பைச் சிறையிருந்து தனிவந்தேன் காலம்போய்
காடேகும் போதுமிந்த தனிமையே
நெருப்பைச் சுமப்பதுபோல் நினைவைச் சுமந்திருக்க
நேர்ந்திருந்த நாளெல்லாம் தனிமையே
இருக்கை நித்தியம் என்றெண்ணி துணைக்காக
ஏங்கிநின்ற பொழுதுகளும் தனிமையே
திருக்கை நீட்டியெனை சேர்த்தணைத்த உமையேயுன்
சேவையில் தான்கண்டேன் இனிமையே! 8

மெய்யான உடலொருநாள் பொய்யாகும் மேதினியில்
மேலான உறவுகளும் மறந்து விடும்
தொய்யாத கருமங்கள் தொடர்ந்துவரும் செல்வங்கள்
தூரநின்று கைகாட்டி விடைகொடுக்கும்
எய்யாத பிறவியெலாம் எதிர்நோக்கும் என்னுயிரை
எத்தனையோ ஐயங்கள் சூழும்
பொய்யாத உன்கருணை புதுவெள்ள மாட்கொள்ள
பூக்குமடி ஆனந்த மெனக்குள்! 9

ஆப்பசைத்த குரங்குபோல் ஆசையின் பாற்பட்டு
ஆவென்று ஆழுத எந்தன்
கூப்பிட்ட குரலுக்கு குழந்தையாய் உடன்வந்து
கோட்டத்தை செப்ப மிட்டாய்
காப்பிட்ட கைத்தலங்கள் காட்டுகின்ற முத்திரையில்
காலவிதி கூட மாற்றி
யாப்பிட்ட கவிதைக்குள் என்றென்று முனைப்பாட
என்நாவில் வந்து அமர்ந்தாய்! 10

உணர்வுகளின் சுழிநடுவில் அலைக்கழிந்த உயிரொன்று
உன்பாதப் புணைபற்றி விட்டதம்மா
தணல் நடுவில் தாகத்தில் தவித்துக் கிடந்தவாய்
தண்ணீராய் உன்நாமம் உண்டதம்மா
அனல்மெழுகுத் திரியாக அன்றாடம் தேய்ந்தவுடல்
அங்கம்பட பிரதட்சணம் செய்யுதம்மா
தினம்சமய புரம்மாரி திவ்விய தரிசனத்தில்
தித்தித்துத் தித்தித்து உய்யுதம்மா! 11

தணல்பட்ட புழுவாக தவித்திருந்த அடியேனை
தடுத்தாட் கொண்ட தாயே
மனம்பட்ட பாட்டுக்கு மாற்றாகி சுகமான
மாகாளி கருணை நீயே
தினம்கெட்டுத் திரிந்தவனின் நடைதிருத்திச் சீராக
திசைகாட்டி நின்ற மாரி
கனல்பற்றிக் கற்பூரம் கரைகின்ற நிலைபோலுன்
கருணை பற்றக் கரைந்தேனடி! 12

வளர்கின்ற பருவத்தில் வார்த்தளித்த முத்தளித்து
வந்தவடு இன்று முண்டு
தளர்கின்ற வயதினிலும் தள்ளாடும் நிலையினிலும்
தாங்கிநீ பிடிப்ப துண்டு
கிளர்கின்ற போததனால் கேடொன்றும் சூழாது
காப்பதற்கு கருணை யுண்டு
மலர்கின்ற பக்திக்கு அருள்கின்ற தெய்வமே
மனதில்நீ என்று முண்டு! 13

காட்சிக்கு எளிதான கருத்துக்கு நிறைவான
காவியமே மக மாயி
ஆட்சிக்கு நீதானே அருள்வதுன் விழிதானே
ஆதியந்தம் அபி ராமி
சாட்சிக்கு சத்தியமே சாந்தியின் தரிசனமே
சாஸ்வதமே கரு மாரி
மாட்சிக்கு இலக்கணமே மீட்சிக்கு வழித்தடமே
தாட்சாயணி திரி சூலி! 14

தீமிதிக்கும் காலடியில் சேர்கின்ற குளிர்ச்சியுந்தன்
செவ்வரிக் கண்காட்டும் கருணையம்மா
நாபதித்து அலகாடும் வேற்சின்ன முன்மீது
நம்பிக்கை கொண்டோரின் பலமம்மா
வாகுதித்து வாவென்று உடுக்கடித்து கூப்பிட்டால்
வாழவைக்க வருகின்ற காளியம்மா
நாதுதித்து நான்பாடும் பாட்டெல்லாம் நின்புகழே
நாயகியே சமயபுரம் மாரியம்மா! 15

மாச்சரிய மனம்கழுவி மாசறவே நீராடி
மஞ்சளுடை தரித்து கையில்
தீச்சட்டியைத் தாங்கி சிவகாமி பேர்சொன்னால்
சிந்தைக்குள் பால் பொங்குமே
மூச்சடக்கி அவள்பாதம் முன்வணங்கி நோன்பிருக்க
மோகமெனும் உலை யடங்குமே
வீச்சுவிழி தாட்சாயணி வேல்முன்பு தவமிருக்க
யோகநிலை கை கூடுமே! 16

மாகாளி உன்வாசல் மனைபெருக்கிக் கோலமிட்டு
மங்களமாய் நீராடித் திலகமிட்டு
பாகோடு பச்சரிசிப் பொங்கலிடும் பெண்குலத்தை
பாங்கோடு வாழவைக்கு முனைக்கண்டு
ஆகாகா என்னாத்தாள் இவளேதான் என்றுள்ளே
அசையாத நம்பிக்கை கொண்டேன்நான்
மீகாமன் நீயானாய் மேலான மகமாயி
மீட்சியினி உறுதியெனப் பணிந்தேன்நான்! 17

திரிசூலங் கைக்கொண்டு தீவினை அழிக்கின்ற
ஜெகதீஸ்வரி சமயபுரம் மாரி
கரிமேனிக் கனலாகி காட்சிதரும் ஒளியாக
கரமுயர்த்தி ஆணையிடு காளி
திரிபோட்டு மாவிளக்கு தீபத்தின் சுடரேற்றி
திசைநோக்கிக் கைகூப்பு கின்றேன்
அறிவூட்ட உன்கருணை அறங்காட்ட கைத்தலங்கள்
அருள்கூட்டித் துணைநிற்க என்றும்! 18

வேப்பிலைக்கும் மஞ்சளுக்கும் மாற்றுயிலை சக்தியுந்தன்
வேல்முனைக்கு எதிர்நிற்கும் பகையுமிலை
காப்பிலையோ எனக்கலங்கும் ஏழைக்கும் பயமில்லை
காப்பாக நீயிருக்கக் கவலையில்லை
தோப்பினிலே பழமுதிரும் தூயமலர் தேன்சிதறும்
தோற்காத தருமங்கள் மதிலாகும்
மாப்பெரிய சமயபுரம் மாரியம்மா நீயிருக்க
மாயையில்லை சோக மில்லையே! 19

உடல்நோய்க்கு மருந்தாகும் உன்சமயபுரம் மண்ணே
உளநோய்க்கு மருந்துந்தன் கண்ணே
கடல்போன்ற பிறவிக்கு கரையுந்தன் பாதம்
கடப்பதற்கு துணையந்த நாமம்
மடல்தாழை மலர்சூடி மனம்சிவனின் புகழ்பாட
மகிழ்ந்திருக்கும் சிவகாமி நோக்க
இடரெல்லாம் பொடியாகும் இன்பங்கள் தொடராகும்
இவன்நெஞ்சில் அருள் கூடுமே! 20

அம்மை உன்கோபப் பார்வையினால் புண்பட்டோர்
அகம்திருந்தி உன்வாசல் வந்தால்
செம்மை தந்துவடு நீக்கிடுவாய், அந்தகரும்
சீக்கிரமே விழிபார்க்க அருள்வாய்
தம்மை மறந்துமனம் செய்கின்ற பாவங்கள்
தடம்துடைக்க சமயபுரம் நின்றோய்
இம்மை உன்போல ஒருதெய்வம் காணேணே
இனிமேலும் மறப்பேனோ உன்னை! 21

சிரமேவு அரவாட சேர்ந்துகுழல் அசைந்தாட
செவியணி கலன்க ளாட
பிறைகொண்ட நுதலாட பேசுமிரு விழியாட
பிரிகின்ற இதழு மாட
நிறைகொண்ட முத்தாட நெடுநாசி விரிந்தாட
நிலையின்றி மூச்சு மாட
வரிவளைக் கரமாட வலம்புரிக் கழுத்தாட
வளைந்தாடு மக மாயியே! 22

வடங்கொண்ட நகிலாட வடிவழகு இடையாட
வாய்த்தவிரு கால்க ளாட
திடங்கொண்ட தேகத்தின் அங்கங்கள் விரைந்தாட
திசையெட்டு மாட ஆட
தடங்கண்ட பாதமும் தளிர்விரல் நகங்களும்
தகதகவென ஜோதி யாக
இடங்கொண்டு சிவனோடு இணைந்தாடு சிவகாமி
நடங்கண்டு ஆடு மனமே! 23

கலிதீர ஒளிசேர கனிவூற பிணியோட
காளிமக மாயிவந்து ஆடடி
ஒலிகூட உயிரூட உருவேற உளமாற
ஓம்சக்தி சக்திவென்று ஆடடி
வலிவேற பொலிவாக வளம்சேர நலம்கூட
மாரிவரம் தந்தின்று ஆடடி
பலிபீடம் எனைக்காக்க பறையோசை விழிப்பாக்க
பார்வதிநீ சிவனோடு ஆடடி! 24

எங்குநீ இருந்தாலும் பக்தர்கள் குரல்கேட்டு
எழுந்தருளும் அருள்மாரித் தாயம்மா
தங்கிநீ சமயபுரம் தரித்தாலும் தாசன்மனம்
தவறாமல் வந்தமரும் சேயம்மா
பொங்கிநான் கவிபாட பூரித்து நீயாட
புவியோடு கடலாடிக் களிக்குதம்மா
சங்குவளைக் கைசேர்த்து சங்கரனை நீகூட
சாந்தியிலே உயிரெல்லாம் தழைக்குதம்மா! 25

கண்பாவம் செய்யாமல் கண்ணபுரம் காக்க
கால்நடக்கும் பாதையினை வேல்பார்க்க
என்பாவம் பொடியாக உன்விழிகள் நோக்க
எந்தன்கடன் உன்னருட்கை தான்தீர்க்க
முன்பாவம் தொடராமல் உன்நாமம் துரத்த
மோடிகளை உடுக்கையொலித் தேவிரட்ட
மண்பாவ மாட்டாமல் கால்நடக்கும் மகமாயி
மைந்தனெனைக் காத்திடுவாள் வணங்கிடுவேன்!26

வார்த்தைக்குள் அடங்குமோ நின்புகழ் மனிதவிழிப்
பார்வைக்குத் துலங்குமோ திருவுருவம்
கூர்த்தமதி எல்லைக்குள் விளங்குமோ தத்துவம்
கோட்டுக்குள் வணங்குமோ பிரபஞ்சம்
கோர்த்தகவிப் பாட்டுக்கு இரங்கிநீ வந்ததெலாம்
கோதையுன் கருணைதான் வேறேது
வார்த்தடங்கண் மாரியை வணங்காமல் வாழ்வேது
வாழ்த்தம்மா வணங்குகிறேன் நின்பாதம்! 27

கவிபாடும் திறந்தந்தாய் கனிவான குரல்தந்தாய்
கருத்தரிக்கும் மனமும் தந்தாய்
அவைஈர்க்கும் வரம்தந்தாய் அணியாக உருத்தந்தாய்
அளவோடு பொருளு மீந்தாய்
குவிகரத் தோடுநான் கும்பிடும் போதென்முன்
கோதைநீ எழுந்து வந்தாய்
புவிமிசை சமயபுரந் தனிலமர் பரமேஸ்வரி
பொற்பாதம் போற்றி! போற்றி! 28

எழுகின்ற வார்த்தைகள் எல்லாமும் உனையெண்ணி
யாத்திருந்த போதினிலும் அறியாமல்
பழுதிருக்கும் சொல்லேதும் விழுந்திருப்பின் மகமாயி
பாலகனைப் பொறுத்தருள வேண்டும்
தொழுகின்ற பக்தர்கள் கவிதைகளை எடுத்தோத
தோன்றியவர் குறைதீர்க்க வேண்டும்
பொழுதெல்லாம் உன்பெருமை பேசுகின்ற பாடல்கள்
பொற்கோவில் ஒலித்திருக்க வேண்டும்! 29

சித்திக்கு முன்னருள் தித்திக்கும் தரிசனம்
        எத்திக்கும் உன்னாட்சி யே
வித்தைக்கு யந்திரம் விடுவிக்க சக்கரம்
        வேதங்க ளுன்மாட்சி யே
முக்திக்கு உன்பதம் முயற்சிக்கு மந்திரம்
        மொத்தமும் உன்காட்சி யே
சக்திக்கு நிகரில்லை பக்திக்கு மாற்றில்லை
        சத்தியம் நின்சாட்சி யே! 30

குற்றாலம் வள்ளிநாயகம்